

**ஹெய்டியில் பேரழிவை ஏற்படுத்திய பூகம்பம்**

3 மில்லியன் மக்கள் பாதிக்கப்பட்டுள்ளனர்

PAGE 2



**சொந்த பூமிக்கு செல்வதற்கான கனவுகளோடு காங்கேசன்துறை மக்கள்**

யாழ்.மாவட்டம் மல்லாகம் கோணபுலம் நலன்புரி நிலையத்தில் வசித்து வரும் மக்களின் நிலை

PAGE 4



**புனர்வாழ்வு நிலைய மக்கள் வாக்களிக்க வசதியாக ஏற்பாடுகள்**

புனர்வாழ்வு ஆணையாளர் தயா ரட்ணாயக்க அவர்களின் நேர்காணல்.

PAGE 5


# மீண்டும் வாழ்வோம்

මීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8

Vol 2 | No 49

இலவச பிரதி
Free Copy

Lifeline | Humanitarian Information For IDPs

24.01. 2010

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்


## அதியுயர் பாதுகாப்பு வலயங்களில் மீள்குடியேற்றம்

யாழ்ப்பாணம் அதியுயர் பாதுகாப்பு வலயங்களை உடனடியாக நீக்கி, அப்பிரதேசத்திலுள்ள காணிகளை உரித்துடைய பொது மக்களுக்குக் கொடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்து வருகின்றது.

வலிகாமம் வடக்கு அதியுயர் பாதுகாப்பு வலய பிரதேசத்திலிருந்து இடம்பெயர்ந்த மக்கள் மீளக்குடியமர வசதியாகவே இந்த அனுமதியை வழங்கியிருப்பதாக பாதுகாப்பு அமைச்சு தெரிவித்துள்ளது.

எனவே, குடியேற விரும்பும் காணியுரிமையாளர்கள், உறுதிப்படுத்துவதற்கான காணிக்குரிய ஆவணங்களுடன் வலி



■ **வைப்பகப்படம்:** மீள்குடியேறும் மக்கள்

காமம் வடக்கு மற்றும் கோப்பாய் பிரதேச செயலகங்களில் பதிவு செய்து கொள்ளலாம் என தெரிவிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறான நடவடிக்கைகள் இடம்பெயர்ந்தவர்களுக்கு மகிழ்ச்சியளிக்கக்கூடியது என இடம்பெயர்ந்து கோப்பாய் பிரதேசத்தில் வசிக்கும் தர்சினி தெரிவித்தார்.

'நாங்கள் நீண்ட காலம் எங்களுடைய பகுதிகளில் குடியேறாமல் இடம்பெயர்ந்த நிலையில் இருந்தோம். அதன்மூலம் சந்தோசம், நிம்மதி என பலவற்றையும் இழந்தோம். தற்போது மீள்குடியேற்றம் என்பதைக் கேள்வியுறும்போது சந்தோசமடைகின்றோம்'' என தர்சினி தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்.

யுத்தம் நிறைவுபெற்றமையே மீள்குடியேற்றத்திற்கு வழிவகுத்ததாகவும் மீள்குடியமர்த்தப்படவிருக்கும் மக்களுக்கு பல உட்கட்டமைப்பு வசதிகளும் செய்து கொடுக்கப்படவிருப்பதாகவும் சமூக சேவைகள் மற்றும் சமூக நலத்துறை அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா தெரிவித்தார்.

அவர் மேலும் இதுபற்றிக் கூறுகை

*அந்தப் பகுதியைச் சேர்ந்த மக்கள் அவ்வப் பிரதேசங்களில் தாங்கள் வாழ்ந்த இடங்கள், வீடுகள் தொடர்பாக பதிவுகளை மேற்கொள்ள வேண்டும்*

யில், முதலில் அந்தப் பகுதியைச் சேர்ந்த மக்கள் அவ்வப் பிரதேசங்களில் தாங்கள் வாழ்ந்த இடங்கள், வீடுகள் தொடர்பாக பதிவுகளை மேற்கொள்ள வேண்டும். நாங்கள் தற்போது அங்குள்ள ஆலயங்களைத் திருத்தியமைத்து வருகின்றோம். தென்னிலங்கையில் எவ்வாறு பாதுகாப்பு நிலைமைகள் உள்ளதோ அதே போன்றதொரு சூழ்நிலை வட இலங்கையிலும் ஏற்படுத்தப்படும் என்றார்.

இளவாலை வடக்கு மற்றும் கிழக்கு கிராம சேவகர் பிரிவுகள், கோப்பாய், இடைக்காடு, பன்னாலை கிராம சேவ

*குடியேற விரும்பும் காணியுரிமையாளர்கள், உறுதிப்படுத்துவதற்கான காணிக்குரிய ஆவணங்களுடன் வலிகாமம் வடக்கு மற்றும் கோப்பாய் பிரதேச செயலகங்களில் பதிவு செய்து கொள்ளலாம்*

கர் பிரிவு, நகுலேஸ்வரம், தந்தை செல்வபுரம், மாவிட்டபுரம், துர்க்காபுரம், போன்ற தெல்லிப்பளை பிரதேச செயலக பிரிவில் உள்ள கிராம சேவகர் பிரிவுகள் ஆகியவற்றில் மீள்குடியமர அனுமதிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.



**எதிர்வரும் செவ்வாய்க்கிழமையன்று நாடளாவிய ரீதியில் நடைபெறவுள்ள ஜனாதிபதித் தேர்தல் இலங்கை மக்கள் மத்தியில் பலவிதமான எதிர்பார்ப்புக்களை உருவாக்கியுள்ளது. இந்நிலையில், இடம்பெயர்ந்த மக்களது வாக்குகளும் தீர்மானகரமானதாயிருக்கும் எனவும் நம்பப்படுகிறது.**

## ஜனாதிபதித் தேர்தலில் வாக்களிப்பது தொடர்பான அறிவுறுத்தல்

### தேர்தல் திணைக்களம் வெளியிட்டுள்ள அறிவுறுத்தல்:

1. ஜனாதிபதித் தேர்தலில் மூன்று வேட்பாளர்களுக்கு மேற்பட்ட தொகையினர் போட்டியிடுகின்றமையால் வேட்பாளரொருவருக்கு வாக்கொன்றையும் இரண்டு வேறு வேட்பாளர்களுக்கு இரண்டாம் விருப்பையும் மூன்றாம் விருப்பையும் அடையாளமிடுவதற்கு அவகாசமுண்டு.

2. வாக்குச்சீட்டொன்றில் வாக்காளர் அவரது இரண்டாம், மூன்றாம் விருப்புகளை அடையாளமிடாதவிடத்தும் வேட்பாளரொருவருக்கு முறையாக அடையாளமிடப்பட்ட வாக்கொன்று காணப்படுமாயின் அது செல்லுபடியான வாக்கொன்றாக ஏற்றுக் கொள்ளப்படும். ஆயினும் வாக்கொன்று அடையாளமிடப்படாத, இரண்டாம் மூன்றாம் விருப்புகள் மாத்திரம் அடையாளமிடப்பட்டுள்ள வாக்குச் சீட்டொன்று வாக்கொன்று அடையாளமிடப்படாமை காரணமாக நிராகரிக்கப்பட வேண்டியேற்படும்.

3. வாக்குச் சீட்டொன்று அடையாளமிடப்பட வேண்டிய நடைமுறை ஜனாதிபதித் தேர்தல் சட்டத்தில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

(3:1) ''1'' என்ற இலக்கத்தை அடையாளமிடுவதன் மூலம் வேட்பாளரொருவருக்குத் தமது வாக்கினை அளிக்க முடியும்.

(3:2) ''2'' என்ற இலக்கத்தினை அடையாளமிடுவதனூடாக வேட்பாளரொருவருக்குத் தமது இரண்டாம் விருப்பினை அளிக்க முடியும்.

(3:3) ''3'' என்ற இலக்கத்தை அடையாளமிடுவதனூடாக வேட்பாளரொருவருக்குத் தமது மூன்றாம் விருப்பினை அளிக்க முடியும்.

(4) வாக்காளரொருவர் வாக்குச் சீட்டில் வாக்கொன்றை மாத்திரம் அடையாளமிட எதிர்பார்ப்பாராயின்,

(4:1) அவ்வாறான வாக்குச் சீட்டொன்றிலுள்ள அடையாளத்தினால் வாக்காளரின் விருப்பம் வெளிப்படுமாயின் அதனால் வாக்காளரின் ஆளடையாளம் வெளிப்படாத வரையில் அது ஒரு செல்லுபடியான வாக்குச் சீட்டொன்றாகவிருக்கும்.

(4:2) வாக்காளரினால் அவ்வாறு வாக்குச்சீட்டில் குறியிடப்பட்ட அடையாளம் 22 என்ற இலக்கமாகவோ 32 என்ற இலக்கமாகவோ இருக்காத விடத்தும், வேறு எந்த அடையாளமாகவிருந்தாலும் அதை செல்லுபடியான வாக்குச்சீட்டொன்றாக ஏற்றுக் கொள்ள முடியும்.

(5) ஏதேனுமொரு வாக்குச்சீட்டில் வாக்காளரினால் (5:1) வேட்பாளர் ஒருவருக்கேனும் வாக்களிக்கப்பட்டில்லாத அல்லது (5:2) ஒருவருக்குக் கூடுதலான வேட்பாளர்களுக்கு வாக்களித்துள்ள அல்லது (5:3) இரண்டாம் விருப்பு அல்லது மூன்றாம் விருப்பு மாத்திரம் அடையாளமிடப்பட்டுள்ள வாக்குச் சீட்டுகள் நிராகரிக்கப்படுமென்பதோடு எண்ணப்படவும் மாட்டாது.

# ஹெய்டியில் பேரழிவை ஏற்படுத்திய பூகம்பம்

கடந்த வாரம் ஹெய்டியில் இடம்பெற்ற பூகம்பமானது மிக மோசமான மனிதப் பேரழிவை ஏற்படுத்தியுள்ளது.

கரிபியன் கடற்பகுதியில் அமைந்துள்ள சிறிய நாடான ஹெய்டியில் கடந்த 12ஆம் திகதி இரவு 7.3 ரிச்டர் அளவில் பூகம்பம் ஏற்பட்டது. ஹெய்டியின் தலைநகர் போர்ட-ஒப் பிரின்ஸ் பகுதியில் இந்தப் பூகம்பம் ஏற்பட்டது. பூகம்பத்தால் உயிரிழந்தவர்களின் எண்ணிக்கை 2 இலட்சமாக அதிகரித்துள்ளது. இதேவேளை, 3 மில்லியன் மக்கள் பூகம்பத்தால் பாதிக்கப்பட்டுள்ளதாகத் தெரிவிக்கப்படுகின்றது. பெரும்பாலான கட்டிடங்கள் இடிந்து விழுந்துள்ளதுடன், கட்டிட இடிபாடுகளில் சிக்கி பலர் உயிரிழந்துள்ளனர். மோப்ப நாய்களைப் பயன்படுத்தி இடிபாடுகளில் சிக்கியவர்களைக் கண்டறியும் பணியில் மீட்புப் பணியாளர்கள் ஈடுபட்டுள்ளனர்.

அதேவேளை, அந்நாட்டின் ஜனாதிபதி மாளிகை இடிந்து விழுந்துள்ள போதிலும் அந்நாட்டு ஜனாதிபதி தெய்வாதீனமாக உயிர் தப்பியுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது. ஐ.நா அலுவலகம், மருத்துவமனைகள், பள்ளிக்கூடங்கள், அரச அலுவலகங்கள் ஆகியன சேதமடைந்துள்ளன. அதேபோல், தகவல் தொடர்பு கோபுரங்களும் சேதமடைந்துள்ளதுடன் மின்நிலையங்களும் பூகம்பத்தால் சேதமடைந்துள்ளன. இதனால் தலைநகர் போர்ட் ஒப் பிரின்ஸ் இருளில் மூழ்கியுள்ளது.

## அமெரிக்கா

பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட ஹெய்டி மக்களுக்கு நிவாரணப் பணிகளை முன்னெடுக்க 500 கோடி ரூபா நிதியுதவி அளிப்பதாக அமெரிக்க ஜனாதிபதி பராக் ஒபாமா தெரிவித்துள்ளார். அத்துடன் போர்க் கப்பல்களும் ஹெலிகொப்டர்களும் போக்குவரத்துக்கு உதவும் விமானங்களும் அனுப்பி வைக்கப்பட்டுள்ள அதேவேளை, மீட்புப் பணிகளுக்கு 2 ஆயிரம் கடற்படை வீரர்களும் அனுப்பப்பட்டுள்ளனர். வீதிகள் முற்றாக பாதிக்கப்பட்டுள்ளதால் நிவாரணப் பணிகளில் ஈடுபடுவோர் பல்வேறு சவால்களை எதிர்கொள்கின்றனர்.

## ஐக்கிய நாடுகள்

பூகம்பத்தால் ஹெய்டியிலுள்ள ஐ.நா தலைமைக்காரியாலயக் கட்டிடமும் சேதமடைந்துள்ளது. இதில் பணிபுரிந்த 37 உத்தியோகத்தர்கள் பலியானதுடன் 300 உத்தியோகத்தர்கள் காணாமல் போயுள்ளனர். இதனைப் பார்வையிடுவதற்கு ஐ.நா செயலாளர் நாயகம் பான் கீ மூன் கடந்த ஞாயிற்றுக்கிழமை (17) அங்கு விஜயம் மேற்கொண்டார். பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆறு மாதங்களுக்கான நிவாரண உதவிகளை வழங்குவதற்கு 562 மில்லியன் அமெரிக்க டொலர்கள் தேவைப்படுவதாக ஐ.நா தெரிவித்துள்ளது. அதேவேளை, 2 மில்லியன் மக்களுக்கு அவசரகால நிவாரணம் தேவைப்படுவதாகவும் ஐ.நா தெரிவித்துள்ளது.



நிலநடுக்கத்தினால் இடம்பெயர்ந்து கொல்ப் விளையாட்டுத் திடலொன்றில் கூடாரங்களில் வாழும் ஹெய்டி மக்கள்.




ஹெய்டி தலைநகர் போர்ட-ஒப் பிரின்ஸ் பகுதியில் ரிச்டர் அளவு 7.3 இல் பதிவான நிலநடுக்கத்தின் மையப்புள்ளி

பாதிக்கப்பட்ட ஹெயிட்டி மக்களுக்கு நிவாரணங்கள் சென்றடையும்வரை அவர்கள் பொறுமையுடன் செயற்பட வேண்டும் என ஐ.நா செயலாளர் நாயகம் பான் கீ மூன் கோரிக்கை விடுத்துள்ளார்.

## நிவாரணப் பொருட்களை வழங்குவதில் சிக்கல்

பூகம்பத்தால் வீதிகள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளதால் நிவாரணப் பொருட்கள் மக்களை சென்றடைவதில் தாமதம் ஏற்பட்டுள்ளதாக நிவாரணப் பணியாளர்கள் தெரிவித்துள்ளனர்.

விமான நிலையமும் துறைமுகமும் பலத்த சேதத்துக்குள்ளாகியுள்ளமையால் பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட சுமார் 3 மில்லியன் மக்கள் நிவாரண உதவிகளின்றி அவதிப்படுவதாக ஐ.நா தெரிவித்துள்ளது. இதனால் வெளிநாட்டு நிவாரணப் பொருட்கள் விமான நிலையத்தில் தேங்கிக் கிடப்பதாக ஐ.நா சுட்டிக்காட்டியுள்ளது. நிவாரணப் பொருட்களை விநியோகிப்பதில் காலதாமதம் ஏற்பட்டதால் அங்கு கொள்ளைச் சம்பவங்களும் வன்முறைகளும் இடம்பெற்று வருவதாகத் தெரிவிக்கப்படுகின்றது. இதனால் இம்மாத இறுதி வரை அங்கு அவசரகால நிலைமை பிரகடனப்படுத்தப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.



# பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்

## அமைதிப்படை

ஹெய்டியில் பல ஆண்டுகளாக உள்நாட்டுக் கலவரம் இடம்பெற்றதையடுத்து அங்கு அமைதியை ஏற்படுத்த 9 ஆயிரம் ஐ.நா பாதுகாப்புப் படையினர் சேவையில் ஈடுபடுத்தப்பட்டனர். அவர்களில் இலங்கையர், இந்தியர், பிரேசில் மற்றும் ஜோர்தானைச் சேர்ந்தவர்களும் அடங்குவர். பூகம்பத்தில் இவர்களில் சிலர் பாதிக்கப்பட்டதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

## செஞ்சிலுவைச் சங்கம்

பூகம்பத்தால் பாதிக்கப்பட்டவர்களின் விபரங்களைத் திரட்டி வெளியிடுவதற்கு சர்வதேச செஞ்சிலுவைச் சங்கம் தீர்மானித்துள்ளது. உள்நாட்டு மற்றும் வெளிநாட்டைச் சேர்ந்தவர்கள் தமது உறவினர் குறித்த தகவல்களை பெற்றுக் கொள்ளலாம் என அச்சங்கம் தெரிவித்துள்ளது.

ஆழிப்பேரலையால் ஏற்படுத்தப்பட்ட அதிர்ச்சியைப் போன்றதொரு மற்றுமொரு அதிர்ச்சியை ஹெய்டி பூகம்பம் ஏற்படுத்தியுள்ளது. ஹெய்டியில் இயற்கை அனர்த்தங்கள் தொடர்ச்சியான முறையில் ஏற்பட்டாலும் இவற்றை எதிர்கொள்வதற்கான அனர்த்த முகாமைத்துவ நடவடிக்கைகள் முறையாக ஏற்படுத்தப்படவில்லை. தற்போது பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்வதற்கு முன்வந்துள்ள உலக நாடுகள் இயற்கை அனர்த்தங்களை எதிர்கொள்வதற்கு ஹெய்டி மக்களைத் தயார்படுத்துவதற்கான காத்திரமான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது அவசியமானது.



ஹெய்டியின் தலைநகரில் காணப்படும் கட்டிட இடிபாடுகள்.



காயமடைந்த சிறுவனொருவன்...



# போரினால் பாதிக்கப்பட்ட விதவைகளுக்கு பொருளாதார மற்றும் வாழ்வாதார உதவிகள்

**வடக்குக் கிழக்குப் பகுதிகளில் போர்ச் சூழலில் ஏற்பட்ட அனர்த்தங்களினால் பல பெண்கள் விதவைகளாக்கப்பட்டனர். இந்தப் பெண்கள் சமூக மற்றும் பொருளாதார ரீதியில் பல்வேறு சிரமங்களை எதிர்கொண்டு வருகின்றார்கள்.**

*நிரஞ்சனி ரோலண்ட்*

சமூகத்தில் எங்களை வித்தியாசமாகப் பார்க்கின்றார்கள் வேலியில்லாத பயிர்தானே அதனால் மேயலாம் என நினைக்கின்றார்கள். சம்பிரதாயப்படியும் எல்லோரும் எங்களைத் தள்ளி வைக்கப் பார்க்கின்றனர் என மட்டக்களப்பு கல்லடியைச் சேர்ந்த கிருஷ்ண வடிவேல் ராஜேஸ்வரி தனது மனக்குமுறலை எம்மிடம் வெளிப்படுத்தினார்.

வடக்குக் கிழக்குப் பகுதிகளில் போர்ச் சூழலில் ஏற்பட்ட அனர்த்தங்களினால் பல பெண்கள் விதவைகளாக்கப்பட்டனர். இந்தப் பெண்கள் சமூக மற்றும் பொருளாதார ரீதியில் பல்வேறு சிரமங்களை எதிர்கொண்டு வருகின்றார்கள்.

கிருஷ்ண வடிவேல் ராஜேஸ்வரியின் கணவரும் 1990ஆம் ஆண்டில் அரசடியில் வைத்து இனம் தெரியாதோரால் கடத்திச் செல்லப்பட்டுள்ளார். கணவர் தொடர்பான எந்தவொரு தகவலும் கிடைக்காத நிலையில் ஒரே மகளுடன் தவித்த இவருக்கு 2000 ஆம் ஆண்டில் கணவரின் இறப்புச்சான்றிதழ் கையில் கிடைத்துள்ளது. இந்த அதிர்ச்சியுடன் வாழ்க்கையே முடிந்துவிட்டது என நினைத்த அவர், தனது ஒரே மகளுக்காகவேனும் வாழ வேண்டும் என திடசங்கற்பம் பூண்டுள்ளார். எனினும் வாழ்க்கையைக் கொண்டு நடத்துவதற்கு பல்வேறு சவால்களை எதிர்கொண்டு வருவதாக அவர் கூறினார்.

தொழிற்பயிற்சிகள் இன்றி தாம் எதிர்கொள்ளும் சிரமங்கள் தொடர்பில் அவர் தெரிவிக்கையில், எல்லோரும் படித்த விதவைகள் இல்லை. படித்தவர்களுக்கே தொழில் வாய்ப்பு இல்லை. அப்படியானால் நாம் எம்மாத்திரம்? வன்செயலால் பாதிக்கப்பட்ட நான் சுனாமிக்கு முன்னர் தோட்டம் செய்தேன். சுனாமியால் காணிகள் பாதிக்கப்பட்டதையடுத்து தோட்டம் செய்ய முடியாது போனது. எந்தவொரு தொழில் பயிற்சிகளும் எமக்கு வழங்கப்படுவதில்லை. இளைஞர்களுக்கு மாத்திரமே வழங்குகின்றனர். இதனால் பல்வேறு சிரமங்களை எதிர்கொள்கின்றேன் என்றார்.

யாழ்ப்பாணம் குருநகரைச் சேர்ந்த மேரி யூகலிஸ்டா போர்க்காலத்தில் மீனவரான தனது கணவரை இழந்து மூன்று பிள்ளைகளுடன் பல்வேறு கஷ்டங்களை அனுபவித்து வருவதாகத் தெரிவித்தார்.

எனது அம்மாவுடன் வாழ்ந்து வருகின்றேன். இடியப்பம் தயாரித்து விற்று அதில் கிடைக்கும் பணத்தைக்கொண்டு எனது பிள்ளைகளைப் பராமரித்து வருகின்றேன். இடம்பெயர்ந்து வந்தமையால் புனித யோவான் மற்றும் சுண்டுக்குளி பாடசாலைகளில் எனது பிள்ளைகளை இலகுவாக சேர்க்கக்கூடியதாக இருந்தது. ஆண் துணையின்றி அவர்களைப் பாடசாலைக்குக் கூட்டிச்செல்ல முடியாது. பிள்ளைகளின் கல்வியை முன்னெடுக்கப் பணமில்லை என்று யூகலிஸ்டா மேலும் தெரிவித்தார்.

இவர் போன்று போர்க்கால அனர்த்தத்தினால் விதவையாக்கப்பட்டவர்கள் மட்டக்களப்பு, வவுனியா, திருகோணமலை, அம்பாறை மற்றும் யாழ்ப்பாணம் ஆகிய மாவட்டங்களில் வாழ்ந்து வருகின்றனர்.

வடக்கின் வசந்தம் திட்டம் மற்றும் கிழக்கின் உதயம் திட்டத்தின் கீழ் இந்தப் பெண்களுக்குப் பொருளாதார மற்றும் சமூக அபிவிருத்தி தொடர்பான உதவிகளை சிறுவர் அபிவிருத்தி மற்றும் பெண்கள் வலுவூட்டல் அமைச்சு மேற்கொண்டு வருகின்றது.

இது தொடர்பாக சிறுவர் அபிவிருத்தி மற்றும் பெண்கள் வலுவூட்டல் அமைச்சின் திட்டப் பணிப்பாளர் ஜே.பி.எஸ் ஜயசிங்க தெரிவிக்கையில், போரினால் விதவைகளாக்கப்பட்டவர்களின் பொருளாதாரம், தொழில் வாய்ப்பு மற்றும் போஷாக்கினை அபிவிருத்தி செய்வதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றோம். அதேபோல், சுயதொழில் ஒன்றை ஆரம்பிப்பதற்கான உதவிகளையும் வழங்குகின்றோம். இதே வேளை, காணி உரிமைப் பத்திரங்களைக் கொண்டுள்ள விதவைகளுக்கு விவசாயம் மேற்கொள்ள உதவிகளை வழங்க எதிர்பார்க்கின்றோம். காணி இல்லாதவர்களுக்குக் காணிகளைப் பெற்றுக்கொடுப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளவுள்ளோம். இதேபோல், கணவரின் பெயரில் காணி உறுதிப் பத்திரம் உள்ள பெண்களுக்கு அதற்கான உரிமையைப் பெற்றுக்கொடுப்பதற்கேற்ப வடக்கின் வசந்தம் திட்டத்தினருக்கும் காணிப் பதிவுத் திணைக்கள அலுவலர்களுக்கும் அறிவித்து அதற்கான உதவிகளை வழங்க எதிர்ப்பார்க்கின்றோம் என்றார்.

கணவரை இழந்த போதிலும் தமது பிள்ளைகளுக்காக வாழ வேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்ளாக்கப்பட்டுள்ள இந்த விதவைகளின் வாழ்க்கையை கொண்டு நடத்துவதற்கு இவ்வாறான செயற்பாடுகள் முன்னெடுக்கப்படுவது அவசியமானதாகும். அதேபோல், இந்த உதவிகள் அவர்களை முழுமையாக சென்றடைகின்றதா என்பது தொடர்பிலும் பொறுப்பு வாய்ந்த அதிகாரிகள் கவனம் செலுத்த வேண்டும்.

## வடக்கில் நிறுவப்படவிருக்கும் அபிவிருத்தி வங்கிகள்



இலங்கை மத்திய வங்கி ஆளுநர்
**அஜித் நிவாட் கப்ரால்**

*“சலுகை அடிப்படையில் கடன்களை வழங்குகிறோம். இதனால் இடம்பெயர்ந்திருப்பவர்கள் தமது சொந்த இடங்களுக்கு மீளத் திரும்பியவுடன் அவர்களுடைய வாழ்வாதாரங்களை உடனடியாக ஆரம்பிக்க முடியும்.”*

யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட வடபகுதியை அபிவிருத்தி செய்வதற்காக வடக்கில் அபிவிருத்தி வங்கியொன்று அமைக்கப்படும் எனவும் அவ்வங்கியானது மீள்குடியமர்த்தப்பட்ட மக்களுக்கு கடன் வசதிகளை ஏற்படுத்திக்கொடுக்கும் நோக்கத்துடன் செயற்படும் என்றும் மத்திய வங்கி ஆளுநர் அஜித் நிவாட் கப்ரால் தெரிவித்தார்.

அவர் இதுபற்றிக் கூறுகையில்; ‘நாங்கள் 3 பில்லியன் ரூபாவினை இதற்கென ஒதுக்கியிருக்கின்றோம். 8 பங்குதாரர் வங்கிகள் மூலமாக மீளக்குடியேறிய மக்களுக்கு சலுகை அடிப்படையில் கடன்களை வழங்குகிறோம். இதனால் இடம்பெயர்ந்திருப்பவர்கள் தமது சொந்த இடங்களுக்கு மீளத் திரும்பியவுடன் அவர்களுடைய வாழ்வாதாரங்களை உடனடியாக ஆரம்பிக்க முடியும். எனவேதான் இந்த அபிவிருத்தி வங்கி நடவடிக்கைகளை பங்குதாரர் வங்கிகளுடன் இணைந்து ஆரம்பிக்கின்றோம்’ என்றார்.

இந்தக் கடன் வசதிகள் மத்திய வங்கி மூலம் இலங்கை வங்கி, மக்கள் வங்கி, ஹட்டன் நேஷனல் வங்கி, கொமர்ஷல் வங்கி, சம்பத் வங்கி, செலான் வங்கி மற்றும் தேச அபிவிருத்தி வங்கி போன்ற வங்கிகள் மூலம் சலுகை அடிப்படையில் மக்களுக்கு வழங்கப்படும் என மத்திய வங்கி ஆளுநர் மேலும் தெரிவித்தார்.

நாட்டின் ஏனைய பகுதிகளில் பிராந்திய மட்டத்தில் அபிவிருத்தி வங்கிகள் உள்ளன. அவை பல வர்த்தக நடவடிக்கைகளுக்காக கடன் உதவிகளை வழங்கி வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

## ‘சிறுவர் உதவி இணைப்பு’ செயற்றிட்டம்

வவுனியா மாவட்ட செயலகத்தின் குடும்ப உறவுகளைத் தேடும் பிரிவின் (Family Tracing Unit) ஒரு பகுதியாக ’சிறுவர் உதவி இணைப்பு’ (Helpline for Children) மாவட்டத்தின் அரசாங்க அதிபர் திருமதி.பி.எஸ்.எம்.சார்ள்ஸ் இனால் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

குடும்பங்களிலிருந்து பிரிந்த சிறுவர்களை மீள இணைத்தல், சிறுவர் துஷ்பிரயோகத் தடுப்பு முதலான விடயங்கள் இப்பிரிவினால் கையாளப்படும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

நன்னடத்தைச் சிறுவர் பராமரிப்புத் திணைக்களத்தோடு இணைந்து வவுனியா மாவட்ட செயலகம் முன்னெடுக்கும் இச் செயற்றிட்டத்துக்கு யுனிசெப் உதவி வழங்குகின்றது.

**024 222 55 66**

தற்போதைக்கு வார நாட்களில் காலை 8.30 இலிருந்து மாலை 5.30 மணிவரை இந்தத் தொடர்பிலக்கம் சேவையிலிருக்கும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

# சொந்த பூமிக்கு செல்வதற்கான கனவுகளோடு காங்கேசன்துறை மக்கள்

*சு. சத்தியா*

**எங்களுக்கு வாக்களிக்குமாறு கேட்டு வரும் தேர்தல் வேட்பாளர்களுக்கு நான் தெரிவிப்பது என்னவென்றால் எங்களுடைய சொந்த இடத்திற்கு மீள்குடியேற்றம் செய்ய வேண்டும் என்பதுவே.** இடம்பெயர்வு எங்களுடைய பிள்ளைகளின் மனதை மிகவும் பாதித்துள்ளது. சொந்த நாட்டிலேயே அகதி என்ற பட்டம் எங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. இந்த அகதி வாழ்க்கை இல்லாமல் போக வேண்டும் என்ற ஏக்கங்களோடு யாழ்.மாவட்டத்தில் அமைந்துள்ள மல்லாகம் கோணபுலம் நலன்புரி நிலையத்தில் வசித்து வருகின்றார் ஐம்பத்தெட்டு வயதுடைய பொன்னம்பலம் சண்முகராஜா. 1990 ஆம் ஆண்டு காங்கேசன்துறையிலிருந்து இடம்பெயர்ந்து கோணபுலம் நலன்புரி நிலையத்தில் வசித்து வரும் சுமார் 350க்குட்பட்ட குடும்பங்களைச்சேர்ந்தவர்களின் நிலையும் இதுவேயாகும்.

> **“பொருட்களை பணம் கொடுத்து வாங்குவதற்கு எங்களிடம் போதிய வசதியும் இல்லை. அதனால் விறகிற்கான செலவைக் குறைக்க விரும்பி எனது உறவினர்களுடன் விறகு எடுக்கக் காட்டிற்குச் சென்றவேளையில் கண்ணிவெடியினால் பாதிக்கப்பட்டேன்.”**

ஏனையோர் தத்தமது சொந்த இடங்களில் சந்தோசமாக வாழும்போது தாங்கள் இவ்வாறு நலன்புரி நிலையத்தில் வசித்து வருகின்றமை தமக்கு மிகவும் வேதனையாக உள்ளதாகவும் முகாம் எனும்போது நிறைய கட்டுப்பாடுகள் இருப்பதாகவும் தம்மால் சுதந்திரமாக ஏனைய இடங்களுக்கு சென்றுவர முடியாத இக்கட்டான நிலையில் வாழ்ந்து வருவதாகவும் கோணபுலம் நலன்புரி நிலையத்தில் வசிக்கும் மேதானந்தம் இந்திராணி தனது மன வேதனைகளை வெளிப்படுத்தினார்.

காங்கேசன்துறை அரசினால் உயர் பாதுகாப்பு வலயமாக பிரகடனப்படுத்தப்பட்டுள்ளமையால் இம்மக்கள் சுமார் பத்தொன்பது வருடங்கள் இடம்பெயர் வாழ்க்கையை அனுபவித்து வருகின்றனர். 1990ஆம் ஆண்டு காங்கேசன்துறையிலிருந்து இடம்பெயர்ந்த இம்மக்கள் மல்லாகத்தை வந்தடைந்துள்ளனர். அதன் பின்னர் மல்லாகத்திலிருந்து இடம்பெயர்ந்து கொடிகாமத்தைச் சென்றடைந்துள்ளனர். அங்கு ஏற்பட்ட அசாதாரண சூழ்நிலைகள் காரணமாக மீண்டும் இடம்பெயர்வுக்குட்பட்டு கோணபுலம் நலன்புரி நிலையத்தை வந்தடைந்துள்ளனர்.

நான்கு பிள்ளைகளுக்குத் தாயான மேதானந்தம் இந்திராணி கண்ணிவெடியின் தாக்கத்திற்குட்பட்டு தனது வலது காலை இழந்துள்ளார். முகாமில் தண்ணீரைத் தவிர ஏனைய அனைத்தையும் பணம் கொடுத்துத்தான் வாங்க வேண்டும். அவ்வாறு பணம் கொடுத்து வாங்குவதற்கு எங்களிடம் போதிய வசதியும் இல்லை. அதனால் விறகிற்கான செலவைக் குறைக்க விரும்பி எனது உறவினர்களுடன் விறகு எடுக்கக் காட்டிற்குச் சென்றவேளையில் கண்ணிவெடியினால் பாதிக்கப்பட்டேன். கஷ்டமும் வறுமையும் எங்களை வாட்டுகின்றது. பிள்ளைகளின் கல்வி வீணாக்கப்பட்டு விட்டது. இடநெரிசலுக்கு மத்தியில் எங்கும் செல்லமுடியாத நிலையில் உள்ளோம் என்று மேதானந்தம் இந்திராணி தனது மனக்கிடக்கையை வெளியிட்டார்.



வைப்பகப்படம்: அகதி முகாமொன்றில்

ஜனாதிபதித் தேர்தல் அண்மித்துக்கொண்டிருக்கும் இச்சந்தர்ப்பத்தில் சில அரசியல் பிரமுகர்கள் தமக்கு வாக்களித்தால் மிக விரைவில் இம்மக்களை மீள்குடியேற்றம் செய்வதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்வதாக உறுதியளித்துள்ளனர். கடந்த 19 வருடங்களாக இவ்வாறான பொய் வாக்குறுதிகளை நம்பி ஏமாற்றமடைந்துள்ளதாகவும் இனியும் தங்களுடைய சொந்த இடங்களில் மீள்குடியேற்றம் செய்வார்கள் என்ற நம்பிக்கை தமக்கு இல்லை எனவும் இந்திராணியின் கணவரான மேதானந்தம் தெரிவித்தார்.

தாம் இடம்பெயர்வுக்குட்படாமல் இருந்து தமது காணியில் ஒரு தென்னங்கன்றை நட்டிருந்தால் கூட அது தமது பிள்ளைகளின் எதிர்காலத்திற்கு உதவுமெனவும் தற்போது தமக்கென்று சொந்தமாக எதுவும் இல்லையெனவும் தமது பிள்ளைகள் சொந்த மண்ணைப் பற்றி எதுவுமே தெரியாத நிலையில் வாழ்ந்து வருவதாவும் மேதானந்தம் தனது ஆதங்கத்தை வெளிப்படுத்தினார்.

இடம்பெயர்வினால் இங்குள்ள அநேகமான சிறுவர்கள் தமது கல்வியை உரிய முறை

> **“தாம் இடம்பெயர்வுக்குட்படாமல் இருந்து தமது காணியில் ஒரு தென்னங்கன்றை நட்டிருந்தால் கூட அது தமது பிள்ளைகளின் எதிர்காலத்திற்கு உதவியிருக்கும், தற்போது தமக்கென்று சொந்தமாக எதுவும் இல்லை, பிள்ளைகள் சொந்த மண்ணைப்பற்றி எதுவுமே தெரியாத நிலையில் வாழ்ந்து வருகின்றனர்.”**

யில் தொடர முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். உதாரணமாக உயர்தரத்தில் கல்வி கற்கவேண்டிய பதினேழு வயதுடைய சுதேசன் தற்போது சாதாரணதரத்தில் கல்வி பயின்று வருகின்றார். இடம்பெயர்வினாலும் குடும்பத்தில் ஏற்பட்ட வறுமையினாலும் தான் சுமார் ஒரு வருட காலம் பாடசாலைக்கு செல்லவில்லையெனவும் பாடசாலைகளில் தம்மை அகதி என்று கூறி புறந்தள்ளி வைப்பதாகவும் தெரிவித்தார்.

சொந்த இடத்தில் பல வழிகளிலும் வருமானத்தைப் பெற்றுக்கொள்ளக்கூடிய வகையில் கால்நடை வளர்ப்பு, வீட்டுதோட்டம், கைத்தொழில்கள் போன்றவற்றை செய்து வந்ததாகவும் இடம்பெயரும்போது தமது உடமைகள் அனைத்தையும் இழந்துவிட்டதாகவும் தற்போது ஏதுமற்ற நிலையில் நலன்புரி நிலையத்தில் வாழ்ந்து வருவதாகவும் குறிப்பிட்ட பொன்னம்பலம் சண்முகராஜாவின் வேதனைகள் எண்ணிலடங்காதவை.

காங்கேசன்துறை யாழ்.மாவட்டத்தில் மிகவும் வளம்பொருந்திய இடமாகும். இவ்வாறான செல்வம் கொழிக்கும் மண்ணை விட்டு இடம்பெயர் வாழ்க்கையை அனுபவித்து வரும் இம்மக்கள் சொந்த மண்ணிற்குச் செல்வதற்கான ஏக்கங்களோடும் கனவுகளோடும் காத்திருக்கின்றனர். எனவே இம்மக்களுடைய எதிர்பார்ப்புகள் பூர்த்தி செய்துகொடுக்கப்பட்டு புதுவாழ்வு ஏற்படுத்திக் கொடுக்கப்பட வேண்டும்.

## ‘மீண்டும் வாழ்வோம்’ வானொலி நிகழ்ச்சி

**‘மீண்டும் வாழ்வோம்’’ வானொலி நிகழ்ச்சி நவம்பர் மாதம் தொடக்கம் புதிய பல அம்சங்களுடன் இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்தின் தேசிய சேவையில் திங்கள் முதல் வெள்ளிவரை இரவு 9.30 முதல்10.00மணி வரையும் கிழக்கு மாகாணத்தில் பிறை எப்.எம்.வானொலியில் ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகல் 1.30 மணி முதல் 2.00 மணிவரையும் ஒலிபரப்பாகவுள்ளது. எமது நிகழ்ச்சி ஒலிப்பதிவுகளையும் இப்பத்திரிகையையும் http://lifeline.internews.lk/ என்ற இணையத்தளத்தில் தரவிறக்கம் செய்யலாம்.**



எமது நிகழ்ச்சிகள் குறித்த உங்களது கருத்துக்களை எழுதியனுப்புங்கள்.

## உங்கள் எண்ணங்களை எமக்குத் தெரிவியுங்கள்

*அன்பார்ந்த வாசகர்களே,*

*“மீண்டும் வாழ்வோம்’’ தகவல் இதழானது இடம்பெயர்ந்து இடைத்தங்கல் முகாம்களில் வாழும் உங்களது நலன் கருதி வாரம் தவறாமல் வெளிவந்து கொண்டிருப்பதை அறிவீர்கள்.*

*இடம்பெயர்ந்தோர் தொடர்பிலான அரச மற்றும் அரச சார்பற்ற நிறுவனங்களின் முன்னெடுப்புகள், உங்கள் வாழ்வை மீளக்கட்டியெழுப்பக் கூடிய வாழ்வாதாரத் தகவல்கள் எனப் பலதரப்பட்ட விடயங்களையும் காத்திரமான முறையில் உங்களிடம் சேர்ப்பிக்கும் பணியை “மீண்டும் வாழ்வோம்’’ செய்து வருகிறது.*

*மெனிக்பாமிலுள்ள இடம்பெயர்ந்த மக்கள் யாவரையும் ஜனவரி மாத இறுதிக்குள் மீள்குடியேற்ற விருப்பதாக அரசாங்கம் அறிவித்துள்ள நிலையில், அதன் பிறகான காலங்களிலும் உங்களது வாழ்நிலை மேம்பாட்டுக்கு உதவக்கூடிய தகவல்களைத் தர வேண்டிய அவசியம் தொடர்ந்தும் இருப்பதாகவே நாம் நம்புகிறோம்.*

*இது தொடர்பில் நீங்கள் எமக்கு எழுதி அனுப்பக் கூடிய கருத்துகள் மிகுந்த பயன்பயக்குவதாய் அமையும்.*

*கீழ்க்காணும் விடயங்கள் தொடர்பில் உங்களது அபிப்பிராயங்களை எமக்கு எழுதியனுப்புங்கள்:*

- ***“மீண்டும் வாழ்வோம்’’ இதழ் மற்றும் வானொலி நிகழ்ச்சி என்பன இதுவரை காலமும் உங்களுக்கு வழங்கி வந்த தகவல்களால் நீங்கள் பயனடைந்துள்ளீர்களா? எவ்வகையான பயன்கள்?***
- ***நீங்கள் மீள்குடியமரும் இடங்களில் “மீண்டும் வாழ்வோம்’’ இதழ் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களா?***
- ***நீங்கள் எழுத்துத்துறை/இதழியல்துறையில் ஆற்றல் /ஆர்வம் உள்ள பாடசாலை/பல்கலைக் கழக மாணவரா? அவ்வாறாயின் “மீண்டும் வாழ்வோம்’’ இதழுக்கு பங்களிக்க விரும்புகிறீர்களா? (ஆர்வமுள்ளவர்கள் உங்கள் சுயவிபரங்களை எமக்கு அனுப்பி வைக்கலாம். தேவைப்படுமிடத்து நாம் உங்களைத் தொடர்பு கொள்வோம்)***

**ஆசிரியர், மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

# புனர்வாழ்வு நிலையங்களிலுள்ளவர்கள் வாக்களிக்க வசதியாக ஏற்பாடுகள்

புனர்வாழ்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளவர்களுக்கு அரசினால் முன்னெடுக்கப்பட்டு வரும் உதவிகள் குறித்து புனர்வாழ்வு ஆணையாளர் ***தயா ரட்ணாயக்க*** அவர்கள் வழங்கிய நேர்காணல்.






வியாஸ.கல்யாணசுந்தரம்

**புனர்வாழ்வு நிலையங்களிலிருந்து தற்போது வரை 1517 பேர் விடுவிக்கப்பட்டுள்ளனர். இவர்களில் 145 சிறுவர்கள், 712 பெண்கள் மற்றும் 220 ஆண்கள் உள்ளனர். இவர்கள் வாக்களிக்கத் தகுதியுடையவர்களா?**

நிச்சயமாக இவர்கள் வாக்களிக்கலாம். இவர்கள் சிறைக்கைதிகள் அல்ல, யுத்த காலங்களில் சரணடைந்தவர்கள். புனர்வாழ்வு நிலையங்களில் இவர்கள் வாழ்க்கையை மீளக் கட்டியெழுப்புவதற்கென வைக்கப்பட்டார்கள். இவர்கள் தண்டிக்கப்பட்டவர்கள் அல்ல. புனர்வாழ்வு நிலையங்களிலுள்ளவர்களுக்கும் வாக்களிக்க வசதியாக ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**புனர்வாழ்வு நிலையங்களில் உள்ளவர்களுக்கான உதவிகள் எவ்வளவு காலம் நீடிக்கும்?**

நான் அறிந்த வரையில் இடம்பெயர்ந்தவர்களுக்கான உதவிகள் ஆறுமாதம் மட்டுமே நீடிக்கும். ஆனால், புனர்வாழ்வு நிலையங்களிலுள்ளவர்களுக்கான உதவிகள் மூன்று வருடம் வரை கிடைக்கப் பெறும். வாழ்வாதாரத்தை மேம்படுத்துவதற்கான ஆலோசனைகள், தொழிற்பயிற்சி உதவிகள் தொடர்ந்து அவர்களுக்கு கிடைக்கும்.

***புனர்வாழ்வு நிலையத்திலிருந்து வெளியேறுபவர்களாலும் பொலிஸ், இராணுவம் அல்லது வேறெந்த அரச சேவைகளிலும் தாராளமாக இணையலாம்***

**புனர்வாழ்வு நிலையத்திலிருந்து வெளியேறுபவர்கள் தகுதி இருப்பின் அரச சேவையில் இணைய முடியுமா?**

கண்டிப்பாக இணைய முடியும். அதை எவரும் தடுக்க முடியாது. சாதாரண பிரஜை ஒருவருக்கு இருக்கின்ற அனைத்து உரிமைகளும் இவர்களுக்கு உண்டு. பொலிஸ், இராணுவம் அல்லது வேறெந்த அரச சேவைகளிலும் அவர்கள் தாராளமாக இணையலாம்.

**புனர்வாழ்வு நிலையத்திலிருந்து அவர்களை விடுதலை செய்யும்போது என்ன வகையான சட்ட ஏற்பாடுகள் மேற்கொள்ளப்படுகின்றன?**

இவர்கள் விடுதலை செய்யப்படும்போது குறிப்பிட்ட பொலிஸ் நிலைய பொறுப்பதிகாரி, கிராம சேவையாளர் மற்றும் இராணுவ உத்தியோகத்தர்களுக்கும் அறிமுகப்படுத்தப் படுகின்றார்கள். இவர்களுக்கு பிரத்தியேக அடையாள அட்டை மற்றும் விடுதலை செய்யப்பட்டதற்கான நற்சான்றிதழ் பத்திரங்கள் வழங்கப்பட்டிருப்பதனால் சமூகக் கட்டமைப்பில் இணைவதற்கான எவ்வித பிரச்சினையும் இல்லை.

**புனர்வாழ்வு நிலையங்களிலிருந்து வெளியேறிய பின்பும் ஆரம்பத்தில் பெற்ற தொழிற்பயிற்சிகளைத் தொடர முடியுமா?**

அரசாங்கமானது அவர்களுக்கான தொழிற்பயிற்சி வசதிகள் மற்றும் கல்விகற்பதற்கான ஏற்பாடுகளை செய்துள்ளது. அவர்கள் வெளியேறிய பின்பும் அந்த தொழிற்பயிற்சிகளைத் தொடர முடியும்.

# வடக்கில் மீன்பிடிக்க 24 மணிநேர அனுமதி கடற்றொழில் மற்றும் நீரியல் வள அமைச்சு அறிவிப்பு

*டி.சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

வடக்கில் வாழும் மீனவர்கள் 24 மணிநேரமும் மீன்பிடியில் ஈடுபட அனுமதி வழங்கப்பட்டிருப்பதாக கடற்றொழில் மற்றும் நீரியல் வள அமைச்சு அறிவித்துள்ளது. மீன்பிடித்துறையின் அபிவிருத்தியைக் கருத்திற்கொண்டு இந்நடவடிக்கை எடுக்கப்பட்டிருப்பதாக கடற்றொழில் மற்றும் நீரியல் வள அமைச்சின் செயலாளர் பியசேன தெரிவித்தார்.

'வடக்கு, கிழக்கு மாகாணங்களில் மீனவர்கள் தங்களது தொழிலை முன்னெடுத்து செல்வதற்கு விதிக்கப்பட்டிருந்த அனைத்துத் தடைகளும் தற்போது நீக்கப்பட்டுள்ளன. வடக்கின் வசந்தம் மற்றும் கிழக்கின் உதயம் திட்டத்தின் கீழ் நீக்கப்பட்ட இத்தடைகளால் யாழ்ப்பாணம் உட்பட வடக்கு கிழக்கில் உள்ள மீனவர்கள் எவ்விதத் தடையுமின்றி தமது தொழிலை முன்னெடுத்துச் செல்ல முடியும்' எனவும் பியசேன தெரிவித்தார்.

மோதலினால் இடம்பெயர்ந்து பின்னர் மீளக்குடியமர்த்தப்பட்ட மீனவர்களும் தமது தொழிலை முன்னெடுத்து செல்வதற்கான வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருப்பதாகவும் அவர்கள் தமது தொழிலை மீண்டும் முன்னெடுப்பதற்குத் தேவையான படகுகள், மீன்பிடி உபகரணங்களை வழங்குவதற்கான நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட்டிருக்கின்றன எனவும் அவர் மேலும் தெரிவித்தார்.

## தடைகள் நீக்கப்பட்டதன் காரணமாக மீனவர்கள் மட்டுமல்லாது நுகர்வோரும் பெரிதும் பயனடைவார்கள் என எதிர்பார்க்கப்படுகின்றது

இத்தடைகள் நீக்கப்பட்டதன் காரணமாக மீனவர்கள் மட்டுமல்லாது நுகர்வோரும் பெரிதும் பயனடைவார்கள் என எதிர்பார்க்கப்படுகின்றது. இதேவேளை, மீன்பிடிக்கான தடை நீக்கப்பட்டமையானது வடக்கு மாகாண மக்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதமென யாழ்ப்பாணம் மீனவர் சங்கங்களின் தலைவர் இராஜாராம் தெரிவித்தார்.

அவர் இதுபற்றி மேலும் கருத்துரைக்கையில், 'எமது மக்கள் கடந்த முப்பது வருடங்களாக அனுபவித்த துன்ப துயரங்கள் சொல்லில் அடங்காதவை. இருப்பினும், தற்போது ஏ9 பாதை திறக்கப்பட்டிருப்பதன் காரணமாகவும் கடற்றொழிலில் விதிக்கப்பட்டிருந்த தடை நீக்கத்தின் காரணமாகவும் எமக்கு நல்லதொரு தொழில் வாய்ப்பு ஏற்பட்டு தற்போது தினசரி கொழும்பிற்கு குளிரூட்டி வாகனங்கள் மூலம் கடல் உணவுப்பொருட்களை அனுப்பி வைப்பதற்கான சந்தர்ப்பம் கிடைத்துள்ளது. பாதுகாப்பு வலயங்கள் தவிர்ந்த ஏனைய பகுதிகளில் மீனவர்கள் தங்குதடையின்றி தமது தொழிலை முன்னெடுப்பதற்கான வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருக்கின்றன'' என்றார்.

## தற்போது தினசரி கொழும்பிற்கு குளிரூட்டி வாகனங்கள் மூலம் கடல் உணவுப்பொருட்களை அனுப்பி வைப்பதற்கான சந்தர்ப்பம் கிடைத்துள்ளது

தினசரி கிட்டத்தட்ட இரண்டு குளிரூட்டி வாகனங்களில் தலா 3000 கிலோ மட்டில் 6000 கிலோ வரையான கடலுணவுப் பொருட்களை கொழும்பிற்கு அனுப்பி வைப்பதாகவும் முன்னர் கிலோ ஆயிரம் ரூபாய்க்கு விற்பனை செய்யப்பட்ட மீன் தற்போது அறுநூறு ரூபாய்க்கு விற்பனை செய்யக் கூடிய நிலைமை காணப்படுவதாகவும் அவர் மேலும் குறிப்பிட்டார்.

நாட்டில் நிலவிய அசாதாரண சூழ்நிலைகளினால் மக்கள் தமது ஜீவனோபாயத் தொழில்களை முன்னெடுப்பதில் பாரிய சவால்களை எதிர்கொள்ள நேரிட்டது. தற்போது யுத்தம் முடிவுற்ற நிலையில் மீனவர்களுக்கு விதிக்கப்பட்டிருந்த தடை நீக்கப்பட்டமையானது அவர்களது வாழ்வில் மறுமலர்ச்சிக்கு வழிகோலும் என்பதில் ஐயமில்லை.



■ **வைப்பகப்படம்:** மீனவர்கள் சிலர் படகினை கரைக்கு இழுத்துவரும் காட்சி

**உங்கள் கதைகள்**

# இளகிய நெஞ்சம்

**'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சியில் உங்கள் கதைகள் தொடர் நாடக வடிவில் இடம்பெற்று வருகின்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒலிபரப்பாகும் நாடகங்களின் தொகுப்பை இப்பத்திரிகை வாயிலாகவும் உங்களுக்குத் தருகிறோம். கடந்தவாரம் இடம்பெற்ற 'இளகிய நெஞ்சம்' நாடகத்தின் சுருக்கம் இதோ:**



*லோஷினி*

எமது நாட்டைப் பொறுத்தவரையில் இன ரீதியாகப் போராட்டங்கள் இடம்பெற்றாலும் இனங்களைக் கடந்து புரிந்துணர்வுடன் வாழும் மனிதர்களும் இருக்கின்றார்கள். இந்த நாடகத்தில் அநுர ஒரு இராணுவ வீரர். தனது கடமையின் நிமித்தம் அநுர செயற்பட்டாலும் உள் மனது அவர் செய்யும் தவறுகளை அவ்வப்போது சுட்டிக்காட்டியது.

அநுர சக வீரர்களுடன் பயணம் செய்த வாகனம் கண்ணிவெடியில் சிக்கியது. அந்த சந்தர்ப்பத்தில் பாரிய காயத்திற்குள்ளான அநுர, ஒரு வளவிற்குள் தூக்கி எறியப்பட்டார். அந்த விபத்தில் இவர் ஒரு காலை இழந்து, காயத்தின் வேதனையால் கத்தினார். எவரும் கவனிக்கவில்லை. அந்த வளவிற்குள் இருந்த தமிழ் பெண் யாரோ ஒருவரின் அனுங்கல் சத்தம் கேட்பதை உணர்ந்து வெளியில் வந்து பார்த்தார். அநுர காயமடைந்த நிலையில் இரத்த வெள்ளத்தில் மயங்கிக் கிடந்தார்.

அந்தத் தாயின் உள்ளம் துடித்தது. அந்த நேரத்தில், இவன் தனது இனத்திற்கு எதிராக செயற்படுபவன் என்ற எண்ணம் அவரது மனதில் ஏற்படவில்லை. உடனே அநுரவைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்துத் தனது மகளைத் தண்ணீர் எடுத்து வருமாறு கூற, அநுரவைப் பார்த்த ராகவி தாயிடம் அநுரவைக் காப்பாற்றும் முயற்சியைக் கைவிடுமாறு கூறுகிறாள். வேறு ஏதாவது பிரச்சினை ஏற்பட்டுவிடுமோ என்ற பயம் ராகவிக்கு. ஆனால், தாய் சோதிக்கு ஆபத்தில் உள்ள மனிதனைக் காப்பாற்ற வேண்டும் என்ற மனிதாபிமான சிந்தனை மட்டுமே இருந்தது.

மயங்கிய நிலையில் இருந்த அநுரவிற்குத் தண்ணீர் கொடுத்துக் காயத்தை நன்றாகத் துணியால் கட்டி ஆறுதலாகப் பேசிய சோதியைப் பார்க்க அநுரவிற்கு ஆச்சரியம். அந்த நொடியில் அநுர சோதியைத் தனது தாயாகவே நினைத்துக்கொண்டார். பின்பு சோதி அங்கிருந்த பொலிஸ் நிலையத்திற்குத் தகவல் கூறியதும் அநுர வைத்திய சாலையில் அனுமதிக்கப்பட்டார். சோதியின் மனதில் நிம்மதியில்லை. எவராக இருந்தாலும் ஒரு தாய் பெற்ற பிள்ளை என்ற உணர்வில் மறுநாள் அநுரவை வைத்திய சாலையில் சென்று பார்வையிட்டார்.

அதன் பின்பு அநுரவிற்கும் சோதிக்கும் இடையில் நல்ல உறவு ஏற்பட்டது. ஒரு தாய்க்கும் மகனுக்குமான உறவு. சில நாட்களில் சோதியும் ராகவியும் இடம்பெயர்விற்குள்ளானார்கள். அநுர இவர்களுக்கு உதவ முடியாத நிலையில் இருந்தான். எவ்வளவு முயற்சி செய்தும் அநுரவால் உதவ முடியவில்லை. அதன் பின்பு அநுர தனது பணியில் இருந்து நிரந்தரமாக விலகிக்கொண்டான்.

சோதியும் ராகவியும் எங்கு இருக்கிறார்கள் என்று அநுரவிற்கு எந்தத் தகவலும் தெரியாது. தனியார் தொண்டு நிறுவனம் ஒன்றில் பணிபுரியும் அநுரவிற்கு வசந்தன் என்ற தமிழ் நண்பரின் உதவி கிடைக்கிறது. அவருடன் சேர்ந்து இடம்பெயர் முகாம்களில் தங்கியுள்ளவர்களில் சோதியையும் ராகவியையும் தேடும் முயற்சியில் ஈடுபடுகிறான். இது வரை அவர்களைக் கண்டுபிடிக்க முடியாவிட்டாலும் அவர்களுக்கு உதவ அநுர தயாராக இருக்கிறான். மிகவும் இறுக்கமான உணர்வுடன் கடமைபுரிந்த மனிதன் இன்று இரு உறவுகளுக்காகக் காத்திருக்கிறான்.

***அநுர சக வீரர்களுடன் பயணம் செய்த வாகனம் கண்ணிவெடியில் சிக்கியது***

## காய்ச்சல் வலிப்பு

■ குழந்தைகளில் இருந்து பெரியோர் வரை அனைவருக்கும் சாதாரணமாக வரும் ஒரு நோய் காய்ச்சல். பெரும்பாலான நோய்களுக்கு (சுவாசத்தொகுதி நோய்கள் சிறுநீர்த்தொற்றுக்கள் கிருமித்தொற்றுக்கள்) முதலில் தோன்றும் ஒரு அறிகுறி உடல்வெப்பநிலை அதிகரித்தல் ஆகும்;

■ ஆனால் 6 மாதம் தொடக்கம் 6 வயது வரையிலான பிள்ளைகளில் இவ் அதி உயர் வெப்பநிலை ஆனது நரம்புத் தொகுதியை பாதித்து வலிப்பை ஏற்படுத்துகின்றது இவ்வாறு பெரியவர்களில் ஏற்படுவதில்லை.

இக்காய்ச்சல் வலிப்பானது வலிப்பு நோயிலிருந்து வேறுபட்டது. பரம்பரை காரணமாக இக் காய்ச்சல் வலிப்பு ஏற்படும் சந்தர்ப்பம் அதிகமாகும். இது மிகக்குறைந்த சதவீதத்தினரிலேயே ( 2-5%) வலிப்பு நோயாக மாறும்.

■ இக்காய்ச்சல் வலிப்பானது காய்ச்சல் ஏற்பட்டு முதல் 24மணித்தியாலத்தினுள் உச்ச வெப்பநிலையின் போது ஏற்படும். இவ் வலிப்பு 2- 5 நிமிடங்களே நீடிக்கும்.. இவ்வலிப்பு நோயின் போது கை கால்களில் அசாதாரண அசைவைக் காண்பிப்பர்;. சிலர் விறைப்பாக இருப்பர். சில வேளைகளில் சுவாசிக்க சிரமப்படுவர். வாயில் இருந்து நுரை போன்ற திரவம் வெளிவரும்.

இவ்வாறான நிலமைகளில் நீங்கள் பதற்றப்படக்கூடாது.

■ குழந்தையை நிலத்தில் படுக்க வைக்கவும். கதிரை மேசை கூரிய ஆயுதங்கள் முதலானவற்றை அப்புறப்படுத்தவும்.

■ சுத்தமான காற்றோட்டத்திற்கு வழி செய்யுங்கள்

■ குழந்தைக்கு எவ்வித பெருட்களையும் (இரும்பு கத்தி திறப்பு) வாயிலோ கையிலோ கொடுக்க வேண்டாம்.

■ குழந்தையை இறுக்கமாக பிடித்து அசைவுகளை கட்டுப்படுத்த வேண்டாம். இயலுமாயின் குழந்தையின் தலையை சரித்து விடவும். இது அதிகரித்த உமிழ்நீர், சத்தி என்பன வெளியேற உதவும்.

■ இவ்வலிப்பின் போது ஏற்பட்ட அசைவுகள், செயற்பாடுகள், மனநிலை வலிப்பு நீடித்த நேரம் என்பவற்றை அவதானிக்கவும். இது வைத்தியருக்கு தகுந்த சிகிச்சை அளிக்க உதவலாம்.



***இவ்வலிப்பின் போது ஏற்பட்ட அசைவுகள், செயற்பாடுகள், மன நிலை வலிப்பு நீடித்த நேரம் என்பவற்றை அவதானிக்கவும். இது வைத்தியருக்கு தகுந்த சிகிச்சை அளிக்க உதவலாம்.***

■ பெரும்பாலும் இது 5 நிமிடங்களில் நின்று விடும். அதன் பின் குழந்தையை உடனடியாக வைத்தியசாலைக்கு கொண்டு செல்லவும். வலிப்பு 5 நிமிடங்களுக்கு மேற்படுமாயின் குழந்தையை வலிப்புடனே வைத்தியசாலைக்கு கொண்டு செல்லவும். இதன்போது குழந்தையின் தலை கீழ் நோக்கி சரிந்து இருக்குமாறு பேணவும்.

குழந்தையின் வாயை சுத்தமான துணியினால் சத்தி உமிழ்நீர் என்பவற்றை துடைத்து விடவும்.

■ குழந்தைக்கு வலிப்பு நின்று முழு சுயநினைவு அடையும் வரை எதுவும் உண்ண, குடிக்க கொடுக்க வேண்டாம்.

■ காய்ச்சல் வலிப்பு திரும்ப திரும்ப வருதல் 5 நிமிடங்களுக்கு மேல் நீடித்தல் என்பன குழந்தைகளின் நரம்பு தொகுதியையும் மூளை வளர்ச்சியையும் பாதிக்கும்.

எனவே இக்காய்ச்சல் வலிப்பு வராமல் தடுப்பதன் மூலம் எமது குழந்தைகளை பாதுகாத்துக்கொள்வது மிகவும் அவசியம்.

இதற்கு எம்மால் செய்யக்கூடியவை

குழந்தைகளுக்கு காய்ச்சல் ஏற்படும் போது மருத்துவரை நாடி உரிய சிகிச்சையை பெற்றுக்கெள்ளல்.

■ சிறுகுழந்தைகள் உள்ளவர்கள் வைத்தியரால் பரிந்துரைக்கப்பட்ட பரசிட்டமோல் பாணி மருந்து கைவசம் இருப்பதை உறுதிப்படுத்திக்கொள்ளல்.

குழந்தைக்கு காய்ச்சல் ஏற்படும் போது பரசிட்டமோல் பாணியை வைத்தியரால் கூறிய அளவில் குறிப்பிட்ட கால இடைவெளியில் கொடுத்தல்.

■ குழந்தையின் உடைகளை கழற்றி காற்றோட்டம் பெறச் செய்தல்.

■ குழந்தையின் உடல்,கழுத்து பகுதி கமக்கட்டு பகுதி, தொடை, இடுப்பு போன்ற பகுதிகளை அரை வெப்பநிலையிலுள்ள நீரில் நனைத்த துணியினால் அடிக்கடி துடைத்து உடல் வெப்பநிலையை குறைக்கவும்.

■ காய்ச்சல் ஏற்பட்ட குழந்தையின் அருகில் பெரியவர் ஒருவர் இருப்பதை உறுதிப்படுத்துங்கள்.

காய்ச்சலின் போது குழந்தையின் உடலில் இருந்து நீரிழப்பு ஏற்படுவதால் அடிக்கடி நீர், தாய்ப்பால் என்பவற்றை கொடுங்கள்.




INTERNEWS

மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.

USAID FROM THE AMERICAN PEOPLE




**குறள் 11**

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித்
துப்பார்க்குத் துப்பாய தூஉம் மழை

**விளக்கம்:**
உண்பவர்களுக்குத் தகுந்த பொருள்களை விளைவித்துத் தந்து அவற்றைப் பருகுவார்க்குத் தானும் ஓர் உணவாக (பருகும் நீராக) விளங்குவதும் மழையே ஆகும்.

சிங்களம் Let's COMMUNICATE
සිංහල Sinhala **கற்போம்** Lesson 9

பாடம் 9

## உடல் உறுப்புக்கள்
Parts of body

බෙල්ල
**பெல்ல**
கழுத்து Neck

අත
**அத**
கை Eye

| කකුල | පාදය | උදරය |
|---|---|---|
| **ககுல** | **பாதய** | **உதுரய** |
| கால் | பாதம் | வயிறு |
| Leg | Foot | Stomach |

## பறவையின விநோதங்கள்

- விமானம்போல் தரையில் சிறிது தூரம் ஓடிப் பறக்கும், மிக உயரத்தில் கூட்டமாகப் பறக்கும் பறவையினம் அன்னம்
- காலைப் பிடித்துத் தூக்கினால் இறக்கும் பறவையினம் வாத்து.



- பறக்கத்தெரியாது என்றாலும் நீச்சலில் திறமையான பறவை, மனிதனைப் போல் இரண்டு கால்களாலும் நடக்கும் பறவை, கடல் நீரைப் பருகி, கால்களால் அடைகாக்கும் பறவை பென்குயின்.

**யோ. யாழினி.**
வீ. இல. 324, வலயம் - 6
இராமநாதன் ந.பு.நி.


**மகேஸ்வரன் நிலானி**
வீ. இல. 10, வலயம் - 25
இராமநாதன் ந.பு.நி.


**செ. வந்ததீபன்**
வெளிக்குளம்
கனிஸ்ட
வித்தியாலயம்
வெளிக்குளம்,வவுனியா


**வீ. விதுசன்**
தரம் 5, வீ. இல. 55,
இராமநாதன் ந.பு.நி.


**மு. கஜேந்தினி**
தரம் - 7, வீ. இல. 5327
வலயம் - 26
அருணாச்சலம் ந.பு.நி.


**மோ. வக்சி**
தரம் - 8, வீ. இல. 103
வலயம் - 19
இராமநாதன் ந.பு.நி.


**ஜெ.பற்றீசியா**
தரம் - 10, வீ. இல. 22
வலயம் - 32
இராமநாதன் ந.பு.நி.

## நன்மையா, தீமையா?

ஓர் ஏழை உழவனிடம் ஒரு குதிரை இருந்தது. ஒரு நாள் அது காட்டிற்குள் ஓடிவிட்டது. அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் அவனிடம் வந்து, 'உனக்கு வருவாயைப் பெற்றுக்கொடுத்த குதிரை தொலைந்துவிட்டதே'' என்று தம் வருத்தத்தைத் தெரிவித்தனர். அவன் அதைக் கண்டுகொள்ளவில்லை.

சில நாட்கள் சென்ற பின் அவனது குதிரை காட்டில் திரிந்தவாறு சில குதிரைகளையும் அழைத்துக்கொண்டு அவனிடம் திரும்ப வந்து சேர்ந்தது. அதனைக் கண்டு அக்கம்பக்கத்தார் அவனை வாழ்த்த வந்தனர். அவன் அதையும் கண்டு கொள்ளவில்லை.

அந்த முரட்டுக் குதிரைகளில் ஒன்றை அடக்கிச் சவாரி செய்ய விரும்பிய அவனுடைய மகன் தன் காலை உடைத்துக்கொண்டான். அருகிலிருப்பவர்கள் வந்து, 'உனக்கிருந்த ஒரே மகனும் முடமாகிவிட்டானே'' என வருத்தம் தெரிவித்தனர். அவன் அதையும் கண்டுகொள்ளவில்லை.



சில நாட்களில் அரச அதிகாரிகள் வந்து அவ்வூரில் இருந்த இளைஞர்களை வலுக்கட்டாயமாகப் படையில் சேரும்படி அழைத்துச் சென்றுவிட்டனர். உழவனின் மகனுக்குக் கால் உடைந்திருந்ததால் அவனை மட்டும் விட்டுவிட்டனர். அதற்காக அருகிலிருப்பவர்கள் 'நீ அதிர்ஷ்டக்காரன்'' என்று அவனை வாழ்த்தினர். அவன் அதையும் கண்டுகொள்ளவில்லை.

இவற்றில் உண்மையிலேயே நன்மை எது? தீமை எது?

நன்மையாகத் தோன்றுவது எல்லாம் நன்மையும் அல்ல,
தீமையாகத் தோன்றுவது எல்லாம் தீமையும் அல்ல!

# உங்களிடமிருந்து...

### வரம் வேண்டும் தாயே!



அன்பு என்ற சொல்லையே
அழகாக்கும் அன்னையே!
என்னைத் தாலாட்டி சீராட்டி
தமிழ் அமுதம் நிதம் ஊட்டி
கண்ணின் இமையாக
காத்து நின்றாய்!
உயர்ச்சியில் படிக்கல்லாய்
வீழ்ச்சியில் தடைக்கல்லாய்
இருளில் பௌர்ணமியாய்
வெயிலில் நிழலாய்
எனக்குள் நிறைந்திருந்தாய்
உதிரத்தை எனக்களித்த
உத்தமியே..!
வாழ்ந்த கணம் அத்தனையும்
எனக்காகவே வாழ்ந்தாய்
உன்னை வாழவைக்க
நான் எண்ணும்போது
வழிமாறிப் போய்விட்டாயே!

**இராமநாதன் நலன்புரி**
நிலையத்திலிருந்து...

### கருவறைக் கண்ணீர்

*முகம் தெரியா தாயே...*
*உன் கருவறையிலிருக்கும்*
*கடைசி மகள் எழுதும்*
*கண்ணீர்க் கடிதம்!*

*உன் வயிற்றுச் சுவர்களில்*
*என் சுட்டுவிரல் தீட்டும்*
*ஓவியம் புரிகிறதா?*

*நீ பிரசவித்த என்*
*முன்னவர்களைக் காணோமென்று*
*நீ கதறும் ஒலி என்*
*காதுகளுக்குக் கேட்கிறது!*

*காணாமல் போன சகோதரம்*
*காலில்லா அப்பா*
*பூப்பெய்திய அக்கா*
*ஒட்டை வீட்டில்*
*கிளிந்த துணியுடன் நீ*
*இதற்கிடையில் நான் ஏனம்மா?*

**அ.சுசி**
வீ. இல. 48, வலயம் - 22
இராமநாதன் ந.பு.நி.



### தவிக்கின்றேன் உன் நினைவால்!

பூவாய் உதிர்ந்தவளே
பொறுமையின் சிகரமே
கவிதையில் வடிக்கின்றேன்
உன் நினைவுகளை!
இயற்கையை இரசிப்பவளே
இளகின மனத்தவளே
அன்பான அக்காவே!
தரணியில் உன் தங்கை
தவிக்கின்றேன் உன் நினைவால்!

**ச. சிந்துமதி சந்திரன்**
வீ. இல. 8, வலயம் - 38,
இராமநாதன் ந.பு.நி.

'மீண்டும் வாழ்வோம்' பத்திரிகையை எனக்கு மிகவும் பிடித்துள்ளது. என்னைப் போன்ற எல்லா உறவுகளும் இப்பத்திரிகையைப் பெற்றுப் பயன்பெற வேண்டும். உனக்கு என் தைப்பொங்கல் வாழ்த்துக்கள்.

**நீலமேகம் யோகப்பிரியா**
அருணாச்சலம் ந.பு.நி.

மாதவன் குணசேகரன் ஆகிய நான் க.பொ.த உயர்தரப் பரீட்சையில் வணிகப் பிரிவில் 3ஏக்களை எடுத்துள்ளேன். இருந்தும் எனது வாழ்க்கையில் விரக்தி ஏற்பட்டுள்ளது. வாழ முடியுமா என்ற ஏக்கம் என்னுள் எழுகின்றது. 'மீண்டும் வாழ்வோம்' இதழினை ஒருமுறை வாசித்தேன். எனக்குள் ஒரு நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. எனக்கு இந்த இதழ் தொடர்ந்தும் கிடைக்க வேண்டும் என விரும்புகிறேன்.

**மா. குணசேகரன்**
செங்கலடி.

# கண்ணிவெடி கவனம்

**கண்ணிவெடிகள் குறித்து விழிப்புடன் இருங்கள்**









unicef

*இலங்கை அரசாங்கம், யுனிசெப் (UNICEF), ஐரோப்பிய ஒன்றியத்தின் மனிதாபிமான உதவிப் பிரிவு (ECHO), ஸ்பெயின் அரசாங்கம் என்பன இன்டர் நியூஸ் நிறுவனத்துடன் இணைந்து நடத்தை ரீதியிலான மாற்றங்களை உண்டுபண்ணுவதன் மூலம் கண்ணிவெடிகள் மற்றும் வெடிக்காத வெடிபொருட்கள் என்பன தொடர்பான உங்களது விழிப்புணர்வை அதிகரிக்கும் பொருட்டும் அத்தகைய பொருட்களிலிருந்து உண்டாகக்கூடிய அனர்த்தங்கள், காயங்கள் என்பனவற்றை குறைக்கும் பொருட்டும் 'கண்ணிவெடி கவனம்' (Mind the mines) என்ற தலைப்பில் கண்ணிவெடி அபாய கல்வியூட்டல் பிரச்சாரத்தை மேற்கொள்கிறது.*

*இலங்கையின் யுத்தம் நடைபெற்ற பகுதிகளில் சுமார் 1.5 மில்லியன் மிதிவெடிகளும் வெடிக்காத பொருட்களும் சுமார் 40 சதுர கிலோ மீற்றர் பரப்பளவில் பரவிக் காணப்படுவதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.*

**'விழிப்போடு இருப்போம் , வருமுன் காப்போம்'**

**இந்தப் பரப்புரைத் திட்டம் உங்களிடம் இருந்தும் கருத்துக்களை எதிர்பார்க்கின்றது. கண்ணிவெடிகள் தொடர்பான விழிப்புணர்வுத் திட்டம் எவ்வாறு உங்கள் வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தியது என்பது குறித்து எங்களுக்கு எழுதி அனுப்புங்கள்.**



**ஆசிரியர்**
**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**













**சந்தேகத்திற்கிடமான பொருட்களைக் கண்டால் பின்வரும் நிறுவனம் ஒன்றிற்கு அறிவிப்போம்.**

**வவுனியா மாவட்டம்**
CTF: 024 222 1127
DMAO: 024 222 4214
SLA: 025 389 2296
024 324 1138
0113 086 486
MAG: 024 3243451
Sarvatra: 024 492 0206
Horizon: 024 224 8150
FSD: 024 458 9059 / 024 222 0052 / 024 324 5737
DDG: 024 324 8214
UNICEF: 024 222 3485

**மன்னார் மாவட்டம்**
CTF: 023 222 2501
DMAO: 023 222 2235
SLA: 027 224 7549
MAG: 023 224 3451
Sarvatra: 024 492 0206
Horizon: 023 223 3055

**கிளிநொச்சி**
DDG: 024 324 8214

**யாழ்ப்பாணம்**

| | |
|---|---|
| The HALO Trust: | 021 222 3779 |
| DMAO | 021 222 3886 |
| DDG | 021 222 8181 |
| Sarvodaya | 021 222 2351 |
| SOND | 021 222 6700 |
| Unicef - Jaffna | 021 222 2276 |

தங்கள் பகுதியிலுள்ள கிராம சேவை அலுவலர், பாதுகாப்புப் படையினர் ஆகியோருக்கும் தெரியப்படுத்துங்கள்

**✸ யுத்த வெடிபொருள் எச்சங்கள் மிகவும் அபாயகரமானவையாகும் அத்துடன் சிறு தொடுகையினாலும் வெடிக்க வைக்கப்படக் கூடியவையாகும்.**

**✸ முதல் தடவை நீங்கள் தொடும் பொழுது அவை வெடிக்காத காரணத்தினால் அவை பாதுகாப்பானவையென்பதாக அர்த்தமல்ல, அவற்றை ஒருபொழுதும் தொடவேண்டாம். எப்பொழுதும் பாதுகாப்பாக இருங்கள்! உங்களாலும் உயிர்களைக் காக்க முடியும் !**

# 'கண்ணிவெடிகள் குறித்து அதிக அவதானம் தேவை'



**பிரிகேடியர்**
**உதய நாணயக்கார**

***கண்ணிவெடி தொடர்பில் மக்கள் எச்சரிக்கையுடன் நடந்துகொண்டமையால் கடந்த வருடம் மே மாதம் 19ஆம் திகதிக்குப் பின்னர் கண்ணிவெடியால் எவரும் பாதிப்படையவில்லையென இராணுவ ஊடகப் பேச்சாளர் பிரிகேடியர் உதய நாணயக்கார தெரிவித்தார்.***

மே 19ற்குப் பிறகான காலத்தில் வடக்கில் கண்ணிவெடி விபத்துக்களால் நேரக்கூடிய இழப்புகளைக் குறைப்பது தொடர்பில் பொதுமக்களிடத்தில் நிலவும் விழிப்புணர்வு பாராட்டப்பட வேண்டியது என இராணுவப் பேச்சாளர் பிரிகேடியர் உதய நாணயக்கார தெரிவித்தார். 'கண்ணிவெடிகளும் வெடிக்காத வெடிபொருட்களும் அதி ஆபத்தானவை என்பதையும் மறைத்து வைக்கப்பட்டுப் பல வருடங்கள் கழிந்த பிறகும் கூட வெடிக்கக் கூடியவை என்பதையும் மக்கள் அறிந்திருக்கிறார்கள். சந்தேகத்திற்கிடமான பொருட்கள் எவற்றையேனும் கண்டால் அருகிலுள்ள இராணுவ முகாமுக்கு, அரச அதிகாரிகளுக்கு, அரசாங்க அதிபருக்கு அல்லது அரசசார்பற்ற நிறுவனங்களுக்கு அதுபற்றி அறிவிக்க வேண்டும் என்றும் அவர்கள் தற்போது தெரிந்து வைத்திருக்கிறார்கள்' என்றார் அவர்.

எனினும், வடக்கில் கண்ணிவெடியகற்றல் மற்றும் கண்ணிவெடி அபாயக்கல்வியூட்டல் செயற்பாடுகளுக்காக கணிசமான அளவு வளங்கள் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள அதே வேளை, கிழக்கில் மேலும் பல வேலைத் திட்டங்கள் முன்னெடுக்கப்பட வேண்டிய தேவை உள்ளதாக சர்வோதயா நிறுவனத்தின் மட்டக்களப்பு மாவட்ட இணைப்பதிகாரி பாக்கியராஜா மதனகுமார் தெரிவித்தார்.

'அநேகமான கண்ணிவெடியகற்றும் நிறுவனங்கள் வடக்கிற்கு அனுப்பப்பட்டுள்ள காரணத்தால், கண்ணிவெடி தொடர்பான அபாயம் மட்டக்களப்பில் அதிகமாயுள்ளது. செங்கலடியிலுள்ள கித்துள் கிராமத்திலுள்ள இரண்டு சிறுவர்கள் கடந்த வாரம் கண்ணிவெடி விபத்துக்குள்ளாகியுள்ளனர். பாடசாலைச் சிறார்கள், மீனவர்கள், விவசாயிகள் உள்ளிட்ட சுமார் 100 பேர் மட்டக்களப்பில் கண்ணிவெடிப் பாதிப்புக்குள்ளாகியுள்ளனர். இந்த அபாயம் குறித்து மக்கள் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டிய அவசியம் கருதி வீதி நாடகங்கள், தொலைக்காட்சிப் பிரச்சாரங்கள், துண்டுப்பிரசுரங்கள் என்பவற்றினூடாக மட்டக்களப்பு மற்றும் அம்பாறை மாவட்டங்களில் கண்ணிவெடி அபாயக் கல்வியூட்டற் செயற்றிட்டங்களை முன்னெடுத்து வருகிறோம்.'

இலங்கை இராணுவத்தின் மனிதாபிமான கண்ணிவெடியகற்றல் பிரிவு மட்டக்களப்பிலுள்ள கிரான் பிரதேசத்தில் கண்ணிவெடியகற்றல் வேலையை கடந்த வாரம் ஆரம்பித்தது. கண்ணிவெடிச் செயற்றிட்ட அரசசார்பற்ற நிறுவனங்கள் மற்றும் அரசாங்க அதிபர்களுடன் இணைந்து பாடசாலை மற்றும் கிராம மட்டங்களில் விழிப்புணர்வுத் திட்டங்களையும் இலங்கை இராணுவம் முன்னெடுத்துள்ளது.

'மக்கள் எச்சரிக்கையுடனும் விழிப்புணர்வுடனும் இருப்பதற்கும் பரிச்சயமற்றதாகத் தோன்றும் பொருட்களை அண்டாதிருப்பதற்கும் விநோதமான பொருட்களைக் கண்டால் தகவல் அறிவிப்பதற்குமாக பல மட்டங்களில் நாம் போதனைகளை முன்னெடுத்துள்ளோம்'' என இராணுவப் பேச்சாளர் நாணயக்கார தெரிவித்தார்.

மக்களின் போக்குவரத்துக்கு ஏ-9 வீதி திறக்கப்பட்டுள்ள நிலையில் அந்த வீதியினூடாக பயணிப்போர் கண்ணிவெடி தொடர்பான எச்சரிக்கைக் குறியீடுகளை அவதானிப்பது அவசியம் என ஐ.நா அபிவிருத்தித் திட்டத்தின் சிரேஷ்ட திட்ட முகாமையாளர் ஹூரியா கர்தாயி தெரிவித்தார். இது தொடர்பாக அவர் மேலும் தெரிவித்ததாவது:

வீதியின் இருமருங்கிலும் 15 மீற்றர் அளவிலான பகுதி பாதுகாப்பானது. எனினும், அப்பகுதிகளில் முழுமையாகக் கண்ணிவெடி அகற்றப்பட்டுள்ளது என கருதிவிட வேண்டாம். 15 மீற்றருக்கு மேலான பகுதியில் கண்ணிவெடி தொடர்பான அபாயம் உள்ளது. ஆகவே, வாகனங்களில் செல்வோர் வாகனங்களிலிருந்து இறங்குவதற்கு முன்னர் எச்சரிக்கைக் குறியீடுகளை அவதானிப்பதுடன் பொறுப்பு வாய்ந்த அதிகாரிகளின் அறிவுரைகளுக்கும் செவிமடுக்க வேண்டும் என்றார்.

**நீங்கள் அண்மையில் திறக்கப்பட்ட வடக்கிற்கான பாதைகளில் ஒன்றில் (ஏ9 முதலானவை) பயணிப்பவராக இருந்தால்:**

- **அவசியமில்லாமல் எந்த இடத்திலும் தரித்து நிற்காதீர்கள்**
- **பாதையின் இருமருங்கிலும் செல்வதைத் தவிருங்கள், அப்பகுதிகளில் சுற்றுலாக்கள் செல்வது போன்று செயற்பாடுகளில் ஈடுபடாதீர்கள்**
- **கண்ணிவெடி எச்சரிக்கைப் பதாகைகளைக் கவனித்து நடவுங்கள்**

**கிழக்கு மாகாணத்தில் கண்ணிவெடி விழிப்புணர்வு பற்றிய தகவல்களுக்கு கீழ்க்காணும் இலக்கங்களோடு தொடர்பு கொள்ளலாம்:**

**சர்வோதயா மட்டக்களப்பு:**
**065 2225292**
**சர்வோதயா கல்முனை:**
**067 2229274**
UNICEF **மட்டக்களப்பு:**
**065 2223824/2226122**
**திருகோணமலை விபரங்கள்:**
EHED / CARITAS
**026 2222204/2225347/2225954**
CTF - **026 2222751**
UNICEF**திருகோணமலை**
**026 2227773/2224946**

இப்பத்திரிகை எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் (சிலோன்) லிமிட்டெட்டாரால் கொழும்பு - 14, கிராண்ட்பாஸ் வீதி, 185ஆம் இலக்கத்தில் 2010ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 24ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை அச்சிட்டு வெளியிடப்பட்டது.